


தை : 2023

ISSN 3021-6680

Kavi Mulari Magazine

**வெளியிடுவோர் :**
விபுலானந்தர் கலை இலக்கிய மன்றம்,
பேத்தாழை, வாழைச்சேனை.

**பதிவு இல:** EP/CUL/BAT/VAL/03/69/2023

**இதழாசிரியர் :**
ஓவியர் மரகதம் பிரகாஷ்

**இணையாசிரியர் :**
கவிஞர், ஆசிரியர் திருமதி.விஜிதா முருகவேள்

**ஆசிரியர் குழு :**
கவிஞர் நவநிதன்
பிள்ளைக்கவி பிரசாந்
தமிழூராள் அனுஷ்திக்கா
தமிழ்மகள் அனுசதுர்த்திக்கா
கவிஞர், இளஞ்சைவப்புலவர் சிவநந்தினி
கவிஞர், இளஞ்சைவப்புலவர் ஜிதர்சினி
கவிஞர் யேசுசகாயம்

**செவ்விதாக்குநர் :**
கவிஞர், இளஞ்சைவப்புலவர் த.கி.ஷர்மிதன்

**அட்டை வடிவமைப்பு :**
கவிஞர், இளஞ்சைவப்புலவர் த.கி.ஷர்மிதன்

**அட்டைப் படம் :**
இணையம்

**ஆலோசகர்கள் :**
எழுத்தாளர் ஜிஃப்ரி ஹாசன்
கலாநிதி மணிக்கூகவி நஸீரா எஸ் ஆப்தீன்
கவிஞர், கலாபூசணம் முத்துமாதவன்
எழுத்தாளர், கலாபூசணம் மெத்தியேஸ்

## புதிய ஆக்கங்கள் வரவேற்கப்படுகின்றன.

படைப்புகளை அனுப்புவோர் கவனிக்க வேண்டியவை :

- கவிதைகள் மட்டுமே அனுப்பலாம்.
- ஒருங்குறியில் (Unicode font) தட்டச்சு செய்து அனுப்ப வேண்டும்.
- படைப்பாளர், படைப்பின் கீழ் தமிழில் பெயரையும் வசிப்பிடத்தையும் குறிப்பிட்டு அனுப்ப வேண்டும்.
- ஆக்கம் தனது சொந்தப் படைப்பு என்பதை உறுதிசெய்தல் அவசியம்.
- ஒவ்வொரு மாதமும் 15 ஆம் தேதிக்குள் ஆக்கங்கள் அனுப்பிவைக்கப்படல் வேண்டும்.
- ஒருவர் எத்தனை ஆக்கங்களும் அனுப்பலாம்.
- ஆக்கங்கள் அடுத்தடுத்த இதழ்களில் பிரசுரிக்கப்படும்.
- மின்னஞ்சலுக்கு அனுப்பப்படும் ஆக்கங்களே இதழுக்கு ஏற்கப்படும்.

. . . . . . . . . . . . . . . . . . .

## ஆக்கங்களை அனுப்ப

editor2023kavimulari@gmail.com

வாசிப்பு அனுபவத்திற்கு நுழையுங்கள்...

 https://www.facebook.com/profile.php?id=61552005633300

 https://facebook.com/groups/818237263429433/

 https://kavimulari.blogspot.com

படைப்புகளுக்கு படைப்பாளிகளே பொறுப்பாவர். இதழாசிரியர் பொறுப்பல்ல.
ஆக்கங்களைச் செவ்விதாக்கம் செய்வதற்கு ஆசிரியர் குழுவிற்கு உரிமையுண்டு.

"எழுதுகோல் புரட்சி
எங்ஙனும் எழும்பட்டும்
விழுதென விடுதலை
சமூகத்தில் நிலைக்கட்டும்"

படங்களுக்காய் நன்றி நவில்கிறோம் : Google மற்றும் முகநூல்

**நற்கவிகளுக்கு**
**வணக்கம்,**

வாழைச்சேனை பேத்தாழையைத் தளமாகக் கொண்டு இயங்கும் விபுலானந்தர் கலை இலக்கிய மன்றத்தின் முயற்சியாகக் 'கவிமுளரி' எனும் கவிதைசார் மின்னிதழ் வெளிவருகிறது.

பிரதேச கவிஞர்களுக்குக் களம் கொடுப்பதும் அவர்களின் எழுத்தாக்க முயற்சிகளுக்குக் கரம் கொடுப்பதும் எமது பிரதான அவா.

தொடர்ந்து,
9 இதழ்கள் வெளிவந்தன. அதற்கு நீங்கள் வழங்கிய ஆதரவிற்கு மேலான நன்றி. தொடர்ந்தும் ஆதரவளிப் -பீர்கள் என நம்புகின்றோம்.

இதழில் பங்குபெறும்
கவிஞர்கள் யாவர்க்கும்
வாழ்த்துகள்.

சிலரது கவிதைகள் இடம்பெறாமல் போயிருக்கலாம். அவர்களது கவிதைகள் தொடர்ந்து வரும் இதழ்களில் நிச்சயம் வெளிவரும்.

தொடர்ந்தும் உங்கள்
பேராதரவை வேண்டும்,

உங்கள்,
-இதழாசிரியர்

*2024.07.25*

# கவித்தாதுக்கள்

- கவிஞர் அலெக்ஸ் பரந்தாமன்
- கவிஞர் இரா.நிதன்...
- கவிஞர் இர்ஷாத்
- கவிஞர் தமிழ்ப்புதல்வன் க.த.யேசுசகாயம்
- கவிஞர் வி.அபிவர்ணா
- வளர்கவி க. யுவக்ஷனா
- கவிஞர் சோபி
- வளர்கவி வாழையூர் அபி
- பிள்ளைக்கவி பிரசாந்
- கவிஞர் மாலதி இராமலிங்கம்.
- கவிஞர் ரா.பிரேம் சுரேஷ்
- கவிஞர் ஷாய் டிலக்ஷி
- கவிஞர் ஓ.சா.
- கவிஞர் இரவிகாந்தன்
- கவிஞர் நந்தினி
- கவிஞர் வே.ஜெகதீபன்






# -தமிழ்த்தாய் வாழ்த்து-

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே, (௧)

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்குங் கவின்மலையாளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்துசிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. (௨)

~மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை.

# கழுவப்படாத சொற்கள்

செவிகள் பலவும்
தம்முள்
உள்வாங்க முடியாதபடி
அழுக்குகளைப் போர்த்தியிருந்தன
அவனது சொற்கள்.

கூடவே
மழைக்காலத் தூவான நிலைபோன்று
சபித்தலும் தூற்றலும்.

வெட்டை வெளிகளெங்கும்
காற்று
காவிக்கொண்டு திரிந்தன
அவனது சொற்களை.

பரிசுத்தமற்ற
அகவுணர்விலிருந்து மேலெழும்
ஆடைகள் அற்ற
அந்த அம்மணச்சொற்களின்மீது
இலையான்கள்போல் விழுந்து
அருக்களிக்கின்றன
மனிதபார்வைகள்.

அருகே ~

'உன்பேச்சு
உன்னை வெளிப்படுத்துகிறது
(மத்தேயு ~ 26 : 73)' எனும் வேதஒலி
தேவாலயம் ஒன்றிலிருந்து...

இப்போது
அழுக்குச் சொற்களைக் காவும் காற்றோடு
அந்த ஒலியும்
சமாந்தரமாக...

-அலெக்ஸ் பரந்தாமன்
புதுக்குடியிருப்பு.

# ஒட்டைப் பாத்திரத்தில் ஒட்டாத துளிகள்...

யாரென்று அவனை
அறியக்கூட முடியவில்லை
கறுத்துப் போன
பழுத்த தாடியால்
அலங்கரிக்கப்பட்டு அங்கே
முடங்கிக் கிடக்கிறான்...

பாதியில் நிரம்பிய
அவன் தண்ணீர்ப் போத்தலும்
கிழிந்த பேப்பரில்
ஒழிந்த சாப்பாட்டுப் பார்சலும்
அருகே காவல் இருக்கின்றன...

கண் இமைகள் தூங்குகின்றன
கால்கள் அசையவில்லை
கைகளைப் பார்க்கின்றேன்
இறுகப் பிடித்த
குற்றிக் காசுகள்
சிதறிக் கிடக்கின்றன...

சுருட்டை முடியில்
சொருகிய சுருட்டும்
சுறுசுறுப்பில்லாத உடலும்
சுற்றிப்பார்ப்பவரை எல்லாம்
அவன் பிச்சைக்காரனென்று
தெளிவாக அடையாளம்
காட்டி நிற்கின்றன...

விழுந்த ஒற்றை ரூபாயில்
விழிகள் திறக்கின்றன
எழுந்து பார்க்கின்றான்
ஏழையாக அவன்
பிறக்கவில்லையென்றே
எண்ணத் தோன்றுகிறது...

அவனருகே இருந்த
ஒட்டைப் பாத்திரத்தை
உற்றுப் பார்க்கிறான்
ஒட்டாத துளிகளாய்
இன்னும் குற்றிகள்
நிரம்பாமலே இருக்கின்றன
அவன் வயிற்றைப் போன்று...

-இரா.நிதன்...
மட்டக்களப்பு.

# ......கஸல் நிழல்......

புற்காடுகளுக்குள்
உன்னைத்தேடி
பயணப்படலாம்
பின்னிரவுகளுக்குள்
என்கதை என்ன?

உன் நிழலில்
கூடுகட்டும் பறவை
நிலைத்திருப்பதில்லை

உன்னை
எழுத நினைக்கிறேன்
விட்டுவிடுகிறேன்
மீண்டும் தேடி அலைகிறேன்

நீயும் மரணமும்
இல்லையென்றால்
வாழ்வு
அர்த்தமற்றுப் போயிருக்கும்
வாழ்ந்து மரணிக்கிறேன்
உன்னால்

என்ன இருக்கிறது
உன்னிடம்
பேசுவதற்கு
மௌனம் தவிர்த்து

நான்
பழைய பாதைகளில்
பயணிக்கிறேன்
இப்போதெல்லாம் பழைமையில்தான்
உன்னைக் காண முடிகிறது

ஒளியைப் போதிக்கும்
மின்மினி போல்
உன்னைப்
போதிக்கிறேன்

அழாதே
என்மரணம்
உன்னை
விடுதலையாக்கும்.

**-இர்ஷாத்**
**வாழைச்சேனை.**

# பெண்களும் இணையமும்

போதைக் கடிமையாகும் போக்கற்ற மாதினையும்
பாதை வழுவாது பார்த்திருக்கச் சொல்லிவிட்டால்
பேதை மனத்தவளோ பீடிகையும் போடுகின்றாள்
காதைக் கடித்தே கடிந்து.(1)

அலைபேசி வந்தவுடன் ஆட்டமிடும் பெண்டிர்
விலைபேச நிற்கின்றார் விட்டிலெனச் சாய்ந்தே
கலைபேசும் நற்பெருமை கண்டிடாது வாழ்வர்
தலையெங் குயர்ந்திடுமோ தான்(2)

முழுநேரம் மூழ்குகின்ற முட்டாளாய் மாற
நழுவத்தான் செய்கின்ற நல்வாழ்வை எண்ணி
முழுக்குத்தான் போடாத முன்னேற்ற மாதே
இழுக்குத்தான் என்பதறி இங்கு(3)

பெண்மைக் கிழுக்காகும் பேதமை இஃதென்றே
ஆண்களும் சொல்லிவிட்டால் ஆதிக்க மென்போரோ?
பெண்மையின் மேன்மை பெரிதென எண்ணாமல்
உண்மைக்குச் செய்வீரோ ஊறு. (4)

தீதென் றுவரும்போ தென்றலும் சூடாகும்
யாதெனில் உன்நெஞ்சில் யாவையும் நஞ்சாகும்.
மாதெனில் இன்னபிற மாண்புகள் என்பதனை
ஏதெனக் கேட்போரை எத்து (5)

**- தமிழ்ப்புதல்வன் க.த,யேசுசகாயம்**
**கிரான்.**

# தொலைந்த பனைகள்

நாகரிக கோமாளிகளின் பிடியில்
நசுக்கப்படும் நிலத்தில்
தொலைந்து நிற்கும் பனைகள்
எங்கள் சொத்துத்தான்.

வேலியிலும் வீதியிலும்
நிமிர்ந்து நின்ற அழகுதனை
தொலைத்த சமுதாயத்தின் நடுவில்
விழிப்புணர்வு நடைப்பயணங்கள்
பனைகளை பாதுகாக்க
வருடம் ஒருமுறையேனும்
நடந்து கொண்டிருக்கிறது.

ஈழத்தின் சொத்தென
தனித்து நின்ற அடையாளம்
வட்டுக்கள் தெறித்த போதும்
அழியாத புருவமாய்
அழகுதானே சேர்த்தது.

உயிர் தந்து உடல் தந்து
சற்றே தொலைத்து நிற்கும்
பனைகளில் தாத்தா பாட்டியின்
வீட்டு முற்றங்கள் நிரம்பி கிடக்கின்றதது
என் கண்களுக்கு மட்டுமா தெரிகிறது.

-வி.அபிவர்ணா
முல்லைத்தீவு.

# ஏழ்மைக்கல்வி

வறுமையின் உச்சத்திலும்
கஷ்டத்தை கலங்கடித்து
பள்ளிக்கு சென்று
பாடத்தை பயின்று
பல்கலையையும் கற்று
விடாமுயற்சியின் வெற்றியாய்
பட்டங்களையும் பெற்று
எதிர்கால கனவோடு
பதவி உயர்வடைந்து
ஏழ்மையை எளிதாக்கி
திகட்டா செல்வத்துடன்
கஷ்டத்தை கலங்கடித்து
புகழின் உச்சத்திலே
ஊரே சேர்ந்து வாழ்த்த
பெருமித மரியாதையோடு
சிறப்பான வாழ்க்கையை
சீருடன் வாழவைப்பதே
ஏழ்மையின் கல்வி.....

-வளர்கவி க. யுவக்ஷனா

# ஆறுதல்

என் அதிகபட்ச வேண்டுதல்கள் எல்லாம்
என்னோடு நீ இரு
நான் தூக்கம் தொலைத்த இரவின்
கொடூர கனவுகளை கேட்டுக்கொண்டிரு,
என் நாட்களின்
கசந்த நினைவுகளை கேட்டுக் கொண்டிரு,
நான் மறக்க நினைக்கும்
வலிகளைக் கேட்டுக்கொண்டிரு,
நான் தினசரி தோற்றுப்போகும்
காரணத்தைக் கேட்டுக்கொண்டிரு,
நான் இயல்பாய் சிரிக்காத
பொழுதுகளைப் பற்றி கேட்டுக்கொண்டிரு,
என் நாட்குறிப்பின் நிரப்பப்படாத
பக்கங்களைப் பற்றிக் கேட்டுக்கொண்டிரு,
அத்தனையைப் பற்றியும் கேட்டுக் கொண்டே இரு,
உன்னிடம் சொல்லிக்கொண்டு இருப்பதில்தான் ஆறுதல்...

-சோபி

# மனமெனும் கனம்

மறைந்திருக்கும் மனதிற்கு
எத்தனை எறிதல்கள்
அத்தனையும் மறுக்கப்படலாயிற்று!!

பாழும் நிலத்தில்
வேரொன்று ஊடுருவி ~ இறுதியில்
அருக்களைந்து செல்வதில் பயனேதும் இல்லையே.

எனதான கனாக்கள் மீது ஏன் இத்தனை திணிப்புக்கள்
விட்டுவிடுங்கள்.
மனம் கனப்பதற்கு முன்.....

மனத்தினிடத்தில் மலர்களை தொடுப்பதற்குள்
பலரும் பறித்து விடுகிறார்கள்.
அந்நொடியே மனதானது
கனக்க ஆரம்பித்து விடுகிறது.

மனம் கனமாகி கொள்ள
சிந்தனை வெளி
குறுகி விடாமல் இருக்க
கவி வரைய முற்படுகிறேன்...
ஆனாலும் முடியவில்லை.....

-வளர்கவி வாழையூர் அபி

# பேராசை

பணக்கிடங்கில் வாழும் மனிதப்பூச்சிகள்
பதைத்துத் தவித்து தேடுமோர் ஆசை
பெருமை தாங்கும் சிறுமை மாந்தர்கள்
பேறென மேலும் ஓடிடும் ஆசை

இன்துணை இருந்தும் இன்னமும் கூட
இழிவாகி அடுத்தவர் துணையிலே கூடிடும் ஆசை

பண்பால் சிறந்தவன் பணிவால் உயர்ந்தவன்
பாதம் இடறிட தடுமாற்றும் ஆசை

பேய்கள் போலவும் நாறியே வேரிடும்
வேற்றுமை விளைந்த வீரிய ஆசை
பேதைமை கொள்ளும் பேரிடரின் உச்சம்
பேராசை என்றொரு அரக்கனின் அம்சம்

பேராசை கொண்டிடும் மானிட நெஞ்சம்
பெறும் துன்பம் அவனியில் முடியாத விம்பம்.

-பிள்ளைக்கவி பிரசாந்
கிண்ணையூர்.

# வாழ்வறிந்து செலவு செய்வோம்

அன்றாட வாழ்விற்கு ஆயிரம் அலுவல்கள்!
அல்லாடியும் கிடைக்கும் அத்தோடே இன்னல்கள்!
அலைந்து உழைத்தும் அவதியே மிஞ்சுகிறது!
அவனியிலே மதிப்பு எதற்கு இருக்கிறது?

இம்மி இம்மியாய் பொருளைச் சேர்த்தால்
இடியாய் வருகின்ற எதற்கும் உதவும்!
வண்டுகள் தேனீக்கள் எறும்புகள் சேர்க்கின்றன!
வகையின் சேமிக்கும் பழக்கம் காட்டுகின்றன!

அஃறிணைகளில் காண்கிறோம் அரியதோர் திறமை!
அஃதொன்றே உயர்திணைக்குச் சொல்லும் அறத்தை!
சேமித்தப் பின்பே செலவிற்கு வைத்தால்
தானிங்கு முன்னேற வரவாக(வரமாக) அமையும்!

வாழும் முறையறிய வள்ளுவத்தைக் கற்போம்!
தாழக்கோலாய் அறிவினைப் பெற்றிடவே படிப்போம்!
வாழ்வினை ஆய்ந்தே செலவினைச் செய்வோம்!
தாழ்ந்திடும் நிலையே வந்திடாதுத் தடுப்போம்!

-மாலதி இராமலிங்கம்,
புதுச்சேரி.

# இலையுதிர் காலம்

மனிதம் மரத்துப்போன
மனிதர்கள் முகமூடிகளாய்

திண்ணை வைத்த வீடுகள்
தீண்டாமைச் சுவர்களாய்

வழிகாட்டிய முதுமை
வீடுதோறும் ஒட்டடைகளாய்

வியர்வை சிந்திய மைதானங்கள்
தரிசு நிலங்களாய்

தெருவோர விளையாட்டுகள்
தொலைந்த முகவரிகளாய்

கடிதங்கள் கிழிக்கப்பட்டு
புலனத்தில் குப்பைகளாய்

ஆசிரியரின் பிரம்புகள்
உடைந்துபோன கனவுகளாய்

கூட்டு குடும்பங்கள்
கலைத்துப் போட்ட குருவி கூடுகளாய்

இலையுதிர் காலங்களின் நிழல்கள்
தொலைந்து போன நிஜங்களாய்.

-ரா.பிரேம் சுரேஷ்
தமிழ்நாடு.

# ஆசான்

வார்த்தை பல கனிந்து
சொல்லில் சொந்தமாகி
பழங்காலம் பலகூறி
வாழ்க்கையை எடுத்துச்சொல்லி
அனுபவத்தின் பாதையில்
அறிவுதனைக் கடந்து
நட்சத்திரங்களின் பிரகாசம் போல்
மாணாக்கரை ஒளிர வைத்து
தன்னில் பூத்த அறிவை
தரணி முழுவதும் உதிர வைத்து
அன்பின் மொழியில் அரவணைத்து
அகிலம் ஆளும் ஆசானே
உம்மைச் சிரம் தாழ்த்திப் போற்றுகிறேன்...

-ஷாய் டிலக்ஷி
சுங்கான்கேணி.

# இரவுக்கு ஆயிரம் கண்கள்

கவிதையிலிருந்து
கொஞ்சம் இரும்பும்
அதை உருக்கும் பொருட்டு
இசையிலிருந்து நெருப்புமாய்
இராப் பாணர்கள்
இரவல் வாங்கிக்கொண்டனர்
என் பங்கிற்காய்
பூமியின் ஆகக்கூரிய
கொலைக் கருவிகளுக்கென்று
வலிகளையும்
உப்பு மீந்த சில கண்ணீர்த் துளிகளையும்
காதலின் பீடமேசையில் மலர்த்திவிட்டேன்
இனி...
நிலவு பாடும்போது
சாமம் சாமமாக
இரவு பீறிட்டு அழுவதுதான் மீதம்.

-ஓ.சா.
களுவன்கேணி, மட்டக்களப்பு.

# தலைமுறை வாழ்க்கை

மூன்று தலைமுறைக்கு
பின்புதான்
வீடொன்றை கட்ட முடிந்திருக்கிறது...!

முதல் தலைமுறை
அத்திவாரமும்
இரண்டாம் தலைமுறை
சுவரெழுப்பவும்,
மூன்றாம் தலைமுறை
குடி புகவும்
மகிழ்ச்சி கொஞ்ச
நஞ்சமல்ல புது வீட்டில்..!

ஊர் உலகத்திலே
அவர்கள் தான் ஆதிக்குடிகள்...!

கொண்டாட்டம் முடிவதற்குள்
நகரமே கிராமத்துக்கு
வந்துவிட்டது...
அடுத்த தலைமுறைக்கு
பாதையை அகட்ட
வேண்டுமாம்...!

அவர்களின்
நிலமின்னும்
அரசுக்கு சொந்தமாய்
இருக்கிறது...!

**-இரவிகாந்தன்**
**திருகோணமலை.**

# "தீ"க்குள் அப்பா

அப்பா என அழைக்கின்றேன்
எங்கோ இருந்து
"மகளே" என
ஒலிக்கிறது அவர் குரல்

பெற்றெடுத்தால் தான் ஆணென
திமிர்காட்டும் தந்தையரிடையே
தன் கண் மூடும் வரை
பெற்ற சுமையதைச் சுமந்தீர்...

தன் வியர்வைத் துளிகளைச் சிந்தி
உழைத்தீர்
என் வாழ்வு ஒளி வீச,
ஆனால்,
பெண்ணவளின் கண்ணீர்த் துளிகள் சிந்த
சில ஆண்கள்
உழைப்பது தான் கொடுமை அப்பா...

சாதனை பல புரியவில்லை
இருந்தும் சோதனைகளை தாங்கினீர் எமக்காக...
இங்கே
என் போன்ற பெண்களிடம்
சோதனைகளைச் சுமத்துவதே
சாதனைகளாக வாழும் ஆணினத்தின்
நியாயம் தான் எதுவோ...?

திருமணம் என்ற பெயரில்
இரையென கொத்தி
தின்றுகொண்டிருக்கும் பாவிகள்,
இரை தீர்ந்ததும்
இன்னோர் இரையை தேடும் கழுகுகளாய்
ஆயினர்
இந்த ஆடவர் அப்பா

வாழும் போது தன்னுடலைச்
சாறாகப் பிளிந்தீர் எமக்காக...
இன்று
"தீ" க்குள் இரையானீர் என்
தாய்க்காக...அப்பா!

-நந்தினி
பேத்தாழை.

# சுமைவலி

பன்னிரெண்டு வயதை எட்டும்
மங்கையொருத்தி
பூப்படைந்த மொட்டானால்

பூப்பறிக்க இளைஞ ரொருவர்
சாலையோரம் நிற்கையிலே
பேசித்துரத்தி யடித்திடாமல்
பெற்றோரென்ன பொம்மைகளா?

இளைஞர், ஒற்றைவீரம் பேச
பதினெட்டோ இருபதோ பார்த்துதானா
பழைய காலம் திருமணமும் நடந்ததென்று?
ஆச்சியவர் பேசியதால்
சட்டமறிந்த பெற்றோரும்
சேர்த்திட முனைகையிலே
பதினைந்து முடியுமுன்னே ஓடிப்போன
பிள்ளையென ஒப்பாரியும் வைத்திடுவர்

“இளவயது திருமணமாம்”
தடுத்திடவே கூட்டமிருந்தும்
சட்டமென்ன ஓட்டைகளோ?

முறையிடுவோர் சாட்சி சொல்ல
நீதிமன்றம் நாடவேண்டும்
நமகென்ன வீண்கரைச்சல்
விதானையும் விலகிநிற்பர்

பதினெட்டு ஆகுமுன்னே
கையிலொன்றும் வயிற்றிலொன்றும்
குழந்தையது குழந்தை சுமக்கும்
மின்னல் போல வாழ்க்கையது
முடிந்து போன கதையுமாச்சு

ஊனின்றி உறக்கமின்றி
எத்தனைநாள் தவித்திருப்பாள்
பசியாற புலம்பல் செய்ய
சிறுமிகள் மூவரும்
புறப்படுவர் தாய்வீடு

அள்ளியணைத்த அண்ணனுமே தள்ளி நிற்க
சரியாகி திரும்பிடுவாள்
தாயது அரவணைக்க

மாதம் பல கடந்திடவே
மாப்பிள்ளையும் புதுப்பொலிவாய்
புதுப்பெண்ணை யடைந்திருப்பார்
போகந்தான் துய்த்திருப்பார்

இப்படியே போகுதையா
என்னினிய சமூகமது
மாற்றிடவே வேணுமென்றால்
வீரம் கொண்டு விழித்திடுவீர்!

**-வே.ஜெகதீபன்**
**உன்னிச்சை.**



# -தமிழ்மொழி வாழ்த்து-

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே!

வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழிய வே!

ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழிய வே!

எங்கள் தமிழ்மொழி! எங்கள் தமிழ்மொழி!
என்றென்றும் வாழிய வே!

சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்
துலங்குக வையக மே!

தொல்லை வினை தரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நா டே!

வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மொழி!
வாழ்க தமிழ்மொழி யே!

~சுப்பிரமணிய பாரதியார்.



